# முன்னுரை

தமிழ்மொழி மிகத் தொன்மையான மொழி, இம்மொழிக்குரிய எழுத்து வடிவம் எப்பொழுது தோன்றியது என்பது இன்னும் அறிஞர்களிடையே விவாதத்துக்குரியதாகவே இருக்கிறது.

கடந்த இருபது ஆண்டுகளில் தமிழ் தொல் எழுத்தியலில் பல புதிய கருத்துக்கள் தோன்றியுள்ளன. குறிப்பாக தமிழகக் குகைத்தளங்களில் ஏற்கெனவே கண்டுபிடிக்கப்பட்ட தமிழ் பிராமி கல்வெட்டுகளில் தமிழ்மொழிச் செய்திகளே அடங்கியுள்ளன என்னும் திரு. ஐ. மகாதேவனது கருத்து மிக முக்கியமானது.

இவ்வெழுத்துக்கள் அசோகரது கல்வெட்டுகளில் எழுத உபயோகிக்கப்பட்ட பிராமி எழுத்துக்களைப் போன்று உள்ளன. ஆனால் தமிழ் மொழியின் ழ, ள, ன, ற போன்ற சிறப்பு எழுத்துக்கள் சேர்த்து வெட்டப்பட்டுள்ளன. இவ்வெழுத்துக்கள் **தமிழி** அல்லது தமிழ் பிராமிஎன்று வழங்கப்படுகின்றன.

இவ்வெழுத்து முறையைக் குறித்து திரு. ஐ மகாதேவன் கீழ்க்கண்ட கருத்துக்களை தெரிவித்துள்ளார்.

1. இவ்வெழுத்து முறை கிறிஸ்து பிறப்பிற்கு முன்னூறு ஆண்டுகளுக்கு முன் தமிழகத்தில் வழக்கத்தில் வந்திருக்க வேண்டும்.

2. இவ்வெழுத்து முறையில் காலப்போக்கில் பல மாறுதல்கள் ஏற்பட்டுள்ளன.

3. அரிக்கமேடு பானை ஓடுகளிலுள்ள எழுத்துக்கள் அதுவரை ஏற்பட்ட மாறுதல்களுக்கு ஓர் எல்லைக்கோடாக அமைந்திருக்கிறது.

4. அரிக்கமேடு எழுத்துக்களின் காலம் கி. பி. 1—2—ம் நூற்றுண்டுகள்.

5. அரிக்கமேடு எழுத்துக்களின் பின் கி.பி. 6-ம் நூற்றாண்டு வரை பெரும் மாற்றங்கள் ஏற்பட வில்லை. புள்ளி இடும் முறை இக்காலத்தில்தான் தோன்றியது.

இதுவரை கிடைத்துள்ள சான்றுகளின்படி, தமிழி எழுத்துக்கள் தான், தமிழ்மொழியின் தொன்மையான எழுத்து வடிவம் என்று அறிஞர்கள் கருதுகின்றனர்.

தமிழ் மொழிக்கு இக்காலத்திற்கு முன், வேறு வகையான எழுத்து வடிவம் இருந்திருக்கலாம் அது பிற்காலத்தில் மறைந்திருக்கலாம். உலகில் வேறு சில மொழிகளுக்கு அதுபோன்ற நிலை ஏற்பட்டதாக அறிஞர்கள் கருதுகின்றனர். தமிழ்மொழிக்கு அதுபோன்ற எழுத்து வடிவம் இருந்து பிறகு மறைந்ததாக இதுவரையில் சான்றுகள் கிடைக்கவில்லை.

தமிழி எழுத்திலிருந்து வட்டெழுத்தும், தமிழ் எழுத்தும் காலப்போக்கில் பிரிந்து தனித்தன்மை பெற்றன. இதன் காலம் கி. பி. 3-ம் நூற்றாண்டு என்று டாக்டர் நாகசாமி கருதுகிறார். அதற்கு அரச்சலூர் கல்வெட்டை சான்றாகக் கூறுகிறார். கி.பி. 5, 6-ம் நூற்றாண்டுகளில் கலந்த எழுத்துக்கள் காணப்படுவதாகவும் அதன் பிற்காலத்தில் இவை இரண்டும் தனித்தன்மை பெற்று இருப்பதாகவும் தொல் எழுத்தியல் அறிஞர்கள் கருதுகின்றனர்.

வட்டெழுத்து, தமிழ் நாட்டில் சோழநாடு நீங்கலாகவும் கேரளத்திலும் பல நூற்றாண்டுகள் வழக்கத்தில் இருந்திருக்கிறது. சோழர்கள் பாண்டிய நாட்டை தங்கள் ஆட்சிக்குள் கொண்டுவந்த பின் இவ்வெழுத்து முறை அங்கும் செல்வாக்கிழந்தது. 12-ம் நூற்றாண்டில் தமிழகத்தில் இது செல்வாக்கிழந்திருக்கலாம்.

சங்கம் வளர்த்த பாண்டியர் ஆட்சியில் இதுதான் அங்கீகாரம் பெற்ற எழுத்துமுறை. இந்த எழுத்து முறையை நம் மாணவர்கள் அறிந்து கொள்ள வேண்டும் என்ற நோக்குடனே இப்புத்தகத்தை வெளியிட்டுள்ளேன். கடந்த மூன்று ஆண்டுகளாக ஓய்வு நேரங்களில், இந்த எழுத்துவடிவங்களை ஆராயத் தொடங்கினேன். பெரும்பாலும், வேள்விக்குடி செப்பேடுகள், தளவாய்புரம் செப்பேடுகள், சிவகாசி சாசனம், ஸ்ரீ வரமங்கலம் சாசனம், திருவல்லம் சாசனம் ஆகியவைகளிலிருந்தே எழுத்து

வடிவங்களை தேர்ந்து எடுத்து தொகுத்துள்ளேன் பாண்டியர் செப்பேடு பத்து என்ற புத்தகம் இதற்கு மிக உதவியாக இருந்தது. சில எழுத்து வடிவங்கள் பல புத்தகங்களையும், படி எடுத்த பிரதிகளையும் ஆராய்ந்தும் கிடைக்கவில்லை. பிற்காலத்தல கிடைத்தால், அதை சேர்த்துக் கொள்ளலாம்.

பல்லாயிரக்கணக்கான வட்டெழுத்துக் கல் வெட்டுகள் தமிழகத்தில் படி எடுக்கப்பட்டும், அவை படிக்கப்படாமலும், மைசூர் மத்திய தொல் பொருள் அலுவலகத்தில் உள்ளன. தமிழ் மக்களின் தொன்மையை உலகிற்கு தெரிவிக்க படியெடுக்கப்பட்ட பிரதிகளை, நன்கு படித்து ஆராய்ந்து புத்தகங்களாக வெளியிட வேண்டும். வட்டெழுத்து கல்வெட்டுகளை படிக்க மாணவர் களுக்கு இப்புத்தகம் உதவினால் என்குறிக்கோள் வெற்றிபெற்ற தாகக் கருதுவேன்.

இரா. கிருஷ்ணமூர்த்தி

# தமிழ் வட்டெழுத்து

தமிழ் மொழியின், தொன்மை எழுத்து வடிவங்களுள் ஒன்றாகத் திகழும் பெருமை பெற்றது வட்டெழுத்து. இதன் தோற்றம் குறித்து ஆராய்வோம்.

## தோற்றம் :

வளைந்த கோடுகளையே அதிகமாகப் பெற்றிருந்ததால் இந்த வகை எழுத்திற்கு வட்டெழுத்து, வட்டம் என்ற பெயர்கள் உண்டாயின. இவ்வெழுத்திற்கு "தெக்கன் மலையாளம்", "நானு மோனம்" என்ற பெயர்களும் உண்டு. கிரந்த எழுத்துக்கள் கலக்காத வட்டெழுத்தின் ஒருவகைதான் 'கோலெழுத்து', கோலெழுத்தை மலையாளத்தவர்களில் ஒருபகுதியினர் பயன் படுத்தி வந்ததாக தொல்லியில் அறிஞர் திரு. தி. நா. சுப்ரமணியம் கூறியுள்ளார்.

வட்டெழுத்தின் தோற்றம் குறித்து இந்த நூற்றாண்டின் ஆரம்பத்தில் அறிஞர்களிடையே பல மாறுபட்ட கருத்துக்கள் நிலவின. ஆனால் சமீப காலமாக, தொல் பொருள் துறையினர் ஏராளமாக நடுகற்களைக் கண்டுபிடித்து அதிலுள்ள வட்டெழுத்துக்களைப்படி எடுதத பின்னர், வட்டெழுத்தின் தோற்றம் குறித்து தோன்றிய சந்தேகங்கள் மாறிவிட்டன. வட்டெழுத்தின் தோற்றம் குறித்து டாக்டர் நாகசாமி கூறியுள்ள கருத்தை கீழே கொடுததுள்ளேன்,

"அண்மையில் வட ஆற்காடு மாவட்டத்தில் தமிழ் நாடு அரசு தொல்பொருள் ஆய்வுத்துறை பல நடுகற்களைப்படி எடுத்தது. இவை கி.பி. 6-ம் நூற்றுண்டிலிருந்து 9-ம் நூற்றுண்டுக்கு உட்பட்ட காலத்தைச் சார்நதவை. அவற்றில் பெரும்பாலானவை வட்டெழுத்தில் உள்ளன. கி.பி. 5-ம் நூற்றுண்டைச் சார்ந்ததாகக் காணப்படும் இரு நடுகற்கள் தர்மபுரி மாவட்டம் இருளப்பட்டி என்னும் இடததில் இருந்து கிடைத்தன, இவையும் வட்டெழுத்தில் உள்ளன. அண்மையில் கண்டு பிடிக்கப்பட்ட கல்வெட்டுகள் பண்டைத் **தமிழ்** எழுத்தில் இருந்துதான், வட்டெழுத்து வளர்ந்தது என்று தெளிவாகக் குறிக்கின்றன, ஆதலின்

வட்டெழுத்தின் வளர்ச்சியைக் குறித்து இனி ஐயப் பாட்டுக்கே இடமில்லை. தமிழி எழுத்துக்கள் படிப் படியாக. வட்டெழுத்தாக மலர்வதை ஒவ்வொரு எழுத்திலும் காட்டலாம்.

இது காறும் வட்டெழுத்தில் காலத்தால் முற் பட்டதாகக் கருதப்பட்டது செஞ்சியின் அருகில் திருநாதர் குன்று என்ற இடத்தில் கிடைத்த கல் வெட்டாகும். இது கி.பி. 5-ம் நூற்றாண்டைச் சார்ந்ததாகக் கருதப்பட்டது. ஆனால் அண்மையில் கண்டு பிடிக்கப்பட்ட கல்வெட்டுகள் இதைக்காட்டிலும் தொன்மையானவை. இவற்றில் பலவற்றை கவனித்தால், இவை தனி வட்டெழுத்தில் எழுதப்படவில்லை என்றும், வட்டெழுத்தும் தமிழும் கலந்தே எழுதப்பட்டுள்ளன என்பதும் தெளிவாகிறது. இதன் அடிப்படையில் காணும்போது, அரச்சலூரில் உள்ள கல்வெட்டு இரு எழுத்துக்களின் தொடக்கத்தையும் காட்டுகிறது. இரண்டும் ஒரே கல்வெட்டில் கலந்தே எழுதப்பட்டுள்ளதையும், இங்கு காண்கிறோம். ஆதலின் வட்டெழுத்து கி.பி. 3-ம் நூற்றாண்டிலிருந்து தமிழகத்தில் வழக்கில் வந்தது என்று கூறலாம்.

(ஆதாரம் : கல்வெட்டியல்)

திரு. ஐ. மாகதேவன் அவர்கள் வட்டெழுத்தைக் குறித்து கீழ்க்கண்ட கருத்தை வெளியிட்டுள்ளார்.

"தமிழ்-பிராமி எழுத்துக்கள் குறித்து சமீப காலத்தில் பல புதிய கண்டுபிடிப்புகளின் காரணமாக, வட்டெழுத்தின் தோற்றத்தைக் குறித்து ஏற்பட்ட குழப்பங்கள் தீர்ந்துள்ளன. தமிழ்—பிராமி எழுத்துக்களே காலப்போக்கில் மாறுதல் அடைந்து வட்டெழுத்தாக உருவெடுத்தது. தமிழ்-பிராமி எழுத்திலிருந்து எந்தக் காலத்தில் வட்டெழுத்து பிரிந்து தனித்தன்மை அடைந்தது என்று' அறுதியிட்டுக் கூற முடியாது. வேண்டுமானால், பல்லவர்களின் ஆட்சிக்கால ஆரம்பத்தில் (கி பி. 600) இந்த மாறுபாடு ஏற்பட்டிருக்காலம்."

(ஆதாரம் : தமிழ் பிராமி இன்ஸ்ப்கிரிப்ஷன்-ஐராவதம் மகாதேவன்)

மேலே குறிப்பிட்டுள்ள கருத்திற்கு மாறுபட்ட கருத்தை திரு. வி. இராமமூர்த்தி எம்.ஏ. கூறுகிறார்.

பொதுவாக பிராமி எழுத்துக்கள் அனைத்தும் சமண அல்லது பௌத்த சமயச் சார்புடைய கல்வெட்டுக்களிலே காணப்படு

இன்றன வேயன்றி, வேறு பொதுக் கல்வெட்டுச் சான்று எதிலும் காணப்படவில்லை. எனவே இதனைக் கொண்டு பழந்தமிழ் எழுத்துக்கள் பிராமி எழுத்துக்களே என்று-முடிவு கட்டுதல் தவறே யாகும். மேலும் இக்கல்வெட்டுக்களில் பிராகிருத மொழியின் ஆற்றலும் இல்லை என்று சொல்வதற்கில்லை. தமிழுக்கே உரிய எழுத்துக்களாக இவற்றில் ள, ழ, ற, ன ஆகிய நான்கு மட்டுமே தனிப்பட்ட முறையில் கையாளப்படுகின்றன. இவற்றைத் தவிர, மற்றொரு சிறப்பு வடிவம் 'ம' இது அசோகரது பிராமி எழுத்தைப் போலில்லை.

எனவே மாவின் வடிவம் தமிழ் கல்வெட்டுக்களுக்கே உரிய சிறப்பு வடிவமாக காணப்படுகிறது. மற்றபடி, உயிரெழுத்துக்கள் ஒன்பதும், மெய்யெழுத்துக்கள் பதினொன்கும் இரண்டிற்கும் பொது வாகவே உள்ளன. உச்சரிப்பில் இவை வடமொழி, பிராகிருதம், தமிழ் ஆகியவற்றிற்கிடையே வேறுபாடு பெறவில்லையாதலால், இவற்றை தமிழ் பிராமியில் அசோகனது சாசன முறையிலே கையாளப்படுகின்றன. தமிழின் சிறப்பு எழுத்துக்களாக ழ, ள, ற, ன ஆகியவற்றிற்கு அசோக பிராமியில் காணப்படாத வடிவத்தை கையாண்டிருப்பது ஒன்றே பிராமி பழந்தமிழ் எழுத்து ஆகாது என்பதைத் தெளிவாக்குகிறது. இதனை திரு. கே. ஜி. கிருஷ்ணனும் தனது கட்டுரை ஒன்றில் சுட்டிக் காட்டி, இவை வேறொரு மொழியின் வரி வடிவத்திலிருந்து பெறப்பட்டவையாகலாம் என்றும், அந்த மூலவடிவம் கண்டுபிடிக்கப்பட வேண்டியது எனவும் குறிப்பிட்டுள்ளமை இங்கு நோக்கத்தக்கது (Studies in Indian Epigraphy-Vol. I Page 29-30)

**வளர்ச்சி :**

வட்டெழுத்து கி.பி. 3-ம் நூற்றாண்டில் தமிழ் பிராமியி லிருந்து பிரியத் தொடங்கி கி.பி. 6-ம் நூற்றாண்டில் தனித்தன்மை பெற்றதாகக் கருதலாம்.

வட்டெழுத்தின் ஆரம்ப நிலையைத் தெரிந்து கொள்ள, நடு கற்களே பெரிதும் உதவுகின்றன. போரில் இறந்த வீரர்களின் நினைவாக கல்நட்டு வழிபடுவது பண்டைய தமிழ் மரபு. ஊர் மக்களால் எடுக்கப்பட்ட இக்கற்களில், அந்த ஊரில் அக்காலத்தில் வழக்கிலிருந்த எழுத்து முறையைப் பயன்படுத்தி இறந்த வீரனைப்

பற்றிய செய்தி எழுதியுள்ளார்கள். இந்த நடுகற்கள், வட ஆற்காடு, தென் ஆற்காடு, தர்மபுரி, கோவை ஆகிய மாவட்டங்களிலும் செங்கற்பட்டின் மேலைப்பகுதியிலும் கிடைத்துள்ளன. ஆனால் சோழர் காலத்திய வட்டெழுத்து நடுகல் எதுவும் கிடைக்கவில்லை.

வட்டெழுத்தின் வளர்ச்சியைக்குறித்து ஆராயும் போது, அக்காலத்தில் தமிழகத்தின் அரசியல் நிலையைக் குறித்து கவனிக்க வேண்டும். கி.பி. 6-ம் நூற்றாண்டின் பிற்பகுதியில், களப்பிரரை வென்று பாண்டியர்கள், தங்கள் ஆட்சியை மீண்டும் பாண்டிய நாட்டில் நிலைபெறச் செய்தனர். ஆட்சியைப் பிடித்த பாண்டியர், தங்கள் பேரரசை கொங்கு நாட்டின் வடபகுதி வரை பரப்பினர். இவர்கள் ஆட்சிக்காலம் சுமார் கி.பி. 550 முதல் கி.பி. 950 வரை நீடித்தது. கடுங்கோன் வழிவந்த பாண்டிய முதற்பேரரசு என்று சரித்திர ஆசிரியர்கள் கூறுவர்.

ஏறக்குறைய இதே காலத்தில் தொண்டை நாட்டில் பல்லவ மரபினர் ஆட்சிக்கு வந்தனர். இவர்களது ஆட்சி ஏறக்குறைய முன்னூறு ஆண்டுகள் நிலைபெற்று, ஒன்பதாம் நூற்றாண்டு பிற்பகுதியில் வீழ்ச்சியுற்றது.

கி. பி. 6-ம் நூற்றாண்டிலிருந்து 9-ம் நூற்றாண்டு வரை பாண்டியர் ஆண்ட பகுதிகளிலும், வட ஆற்காடு மாவட்டத்தின் மேற்குப் பகுதிகளிலும் வட்டெழுத்து வழக்கிலிருந்திருக்கிறது. பாண்டியர் ஆட்சி காலத்தில் வட்டெழுத்தே அரசு அங்கீகாரம் பெற்ற எழுத்து முறையாக இருந்திருக்கிறது. பாண்டிய நாட்டில் 7-ம் நூற்றாண்டிலிருந்து வட்டெழுத்து கல்வெட்டுகள் கிடைக்கின்றன. 8-ம் நூற்றாண்டில் கிடைத்துள்ள சாஸனங்களில் வட்டெழுத்து நன்கு வளர்ச்சியடைந்து ஒரு தனி வடிவத்தைப் பெற்றதாகவும், இச்சாஸனங்களில் ங, லு, து, று ஆகிய எழுத்துக்கள் ஒன்றுக்கொன்று வேறுபாடுகள் விளங்கும்படி உள்ளன வென்று தொல்லெழுத்து அறிஞர் திரு. தி. நா. சுப்ரமணியம் கூறியுள்ளார்

(ஆதாரம் பண்டைத் தமிழ் எழுத்துக்கள்)

8-ம் 9-ம் நூற்றூண்டு பாண்டியர் காலத்திய செப்பேடுகள் அனைத்தும் வட்டெழுத்தில் உள்ளன. செப்பேடுகள் அரசனால் அளிக்கப்படுபவை. இதனால் வட்டெழுத்து பாண்டியன் அவையில்

சிறப்புற்றிருந்தது என்பது புலப்படுகிறது. பாண்டிய நாட்டில் கி. பி. 1000 ம்ஆண்டுவரை வட்டெழுத்தில் சாஸனங்கள் எழுதப் பட்டுள்ளன. இக்காலத்திற்குப் பிறகு தமிழ் எழுத்துக்களில்தான் சாஸனங்கள் பாண்டிய நாட்டில் எழுதப்பட்டன.

ஆனால் கொங்கு நாட்டில் ஏறக்குறைய கி. பி. 1080-ம் ஆண்டு வரையிலும் அந்நாட்டு மன்னர்களின் சாஸனங்கள், வட்டெழுத்தில் காணப்படுகின்றன. கொங்கு மன்னர்கள் சேர நாட்டு அரசின் கிளைவழியினராகக் கருதப்படுபவர்கள். எனவே அவர்கள் தொடக்க காலத்தில் வட்டெழுத்துக்களையே பயன் படுத்தினர். கி.பி. 1080-வரை கொங்கு நாட்டை ஆண்ட அரசர்கள் வீரசோழ கலிமூர்க்கன், கலிமூர்க்க விக்கிரம சோழன், ஆகியோ ராவர்.

வட்டெழுத்தின் வளர்ச்சியைப் பாண்டியர்களே பெரிதும் ஊக்குவித்திருக்கின்றனர். தமிழ்நாட்டிலே பாண்டிய நாடு தான், செந்தமிழ் நாடு என்று சிறப்பித்துப் பேசப்பட்டது, 'தன்னேர் தமிழ் அளிக்கும் தண்பாண்டிய நாடு' என்பது மாணிக்கவாசகர் வாக்கு. சங்கம் நிறுவி தமிழ் வளர்த்தனர் பாண்டியர். தமிழை வளர்த்த பாண்டியர்கள், வட்டெழுத்தையும் வளர்த்தனர்.

வட்டெழுத்து, தமிழகத்தில் கன்னியாகுமரி, திருநெல்வேலி இராமநாதபுரம், மதுரை, கோவை, சேலம், தர்மபுரி, வடஆற்காடு தென் ஆற்காடு ஆகிய பகுதிகளிலும், செங்கற்பட்டு மாவட்டத் தின் சில இடங்களிலும் வழக்கத்தில இருந்திருக்கிறது. சோழ நாட்டின் பகுதிகளான திருச்சி, தஞ்சை மாவட்டங்களில் வழக் கில் இருந்ததில்லை. பெரும் பான்மையாக தென்பாண்டி நாட்டி லும் சேர நாட்டிலும் வழக்கிலிருந்த இவ்வட்டெழுத்து கோவை, சேலம், தர்மபுரி மாவட்டங்களில் பயன்படுத்தப் பட்டிருப்பது கோவை, சேலம் மாவட்டங்களில் இடைக்காலத்தில் ஏற்பட்ட சேரர்கள் ஆட்சியின் செல்வாக்கினால் இருந்திருக்கலாம் என்றும் கருதப்படுகிறது.

மேலும் தமிழ்நாட்டில் மட்டுமல்லாமல், கர்நாடகா மாநிலத் தில், கோலார் பகுதி வரையிலும் இவ்வட்டெழுத்து நடுகற்கள் கிடைத்துள்ளன. மலபார் பகுதிகளில், இந்து அரசர்கள் வட் டெழுத்தைப் பல நூற்றாண்டு காலம் பயன்படுத்தியதாகவும்,

அதுதான் பிற்காலத்தில் கோலெழுத்தாகிய தென்றும், இவ்வெழுத்திலேதான் இந்த அரசர்கள். சாஸனங்களை எழுதினர் என்றும் திரு. பர்னல் கருதுகிறார்.

(ஆதாரம் Elements of Indian Paleography by A.C. Burnell 1894)

**முடிவு :**

பாண்டிய நாட்டில் மிகச் செல்வாக்குடன் திகழ்ந்த வட்டெழுத்து பாண்டிய நாட்டைச் சோழர்கள் கைப்பற்றிய பிறகு வீழ்ச்சியடைய ஆரம்பித்தது.

பிற்காலச் சோழர் குலத்தைச் சேர்ந்த முதலாம் பராந்தக சோழன் பாண்டிய நாட்டை கி.பி. 910 ஆண்டுக்குப் பிறகு கைப்பற்றியதாகக் கருதப்படுகிறது. அவன் தன்னை 'மதுரை கொண்ட பரகேசரி' என்று கூறிக் கொள்கிறான், அவன் காலத்திலிருந்து சோழர் ஆதிக்கம் பாண்டிய நாட்டில் பரவத் தொடங்கியது. இராசராசன் காலத்தில்தான் பாண்டிய நாடு முழுமையும் சோழர் ஆதிக்கத்தின் கீழ் வந்தது.

சோழர் ஆட்சி காலத்தில் வட்டெழுத்தின் மதிப்பு குறையத் தொடங்கியது. சிறிது காலம் சோழர்களும் வட்டெழுத்தையே பாண்டிய நாட்டில் பயன்படுத்தினர். கி.பி. 12-ம் நூற்றாண்டில் பாண்டியர் பகுதிகளிலிருந்தும் வட்டெழுத்து மறைந்து விட்டதாகக் கருதப்படுகிறது. சுமார் கி.பி. 1387-ம் ஆண்டில் பராக்கிரம பாண்டிய தேவர் திருக்குற்றால நாதஸ்வாமி கோயிலின் கர்ப்பக்கிருகத்தைப் புதுப்பித்தார். அப்போது அதன் சுவர்களில் இருந்த சாஸனங்களை தனியாகப் பெயர்த்தெழுதிக்கொண்டு, கட்டிடம் முடிந்தபின் மறுபடியும், அந்த சாஸனங்களை செதுக்கியுள்ளார். பழைய சுவரிலுள்ள கல்வெட்டு ஒன்று வட்டெழுததாக இருந்ததால், ஒருவரும் படிக்க முடியாததால், அந்த எழுத்தை மட்டும் விட்டு விட்டதாகவும், கல்வெட்டில் எழுதி வைக்கப்பட்டுள்ளது. இதனால் பாண்டிய நாட்டில் 14-ம் நூற்றாண்டில் வட்டெழுத்து வழக்கிலில்லை என்று கருதவேண்டியுள்ளது. வட்டெழுத்து பிற்கால சாஸனங்களில் (ந, ப, ம, ய, ல, வ) ஆகிய எழுத்துக்கள் ஒரே விதமான உருவங்களை பெற்றிருந்தமையால், இவ்வெழுத்தை சந்தர்ப்பத்தை ஒட்டியே வாசிக்க வேண்டுமென்றும், இதனால் இவ்வெழுத்து முறை வழக்கொழிந்திருக்கலாம் என்று, திரு. தி.நா. சுப்ரமணியம் கருதுகிறார். வட்டெழுத்து பல சிறப்பு அம்சங்கள் பொருந்தியது, தமிழ் நாடு சிறப்புற்று இருந்த காலத்தில் வழங்கிய எழுத்து முறையை நாம் மறந்துவிட முடியாது.

# உயிர் எழுத்துக்கள்

தமிழ் மொழிக்கு பன்னிரெண்டு உயிர் எழுத்துகள் உள்ளன.

தொல்காப்பிய எழுத்ததிகாரத்தில்

"ஔகார விறுவாய்
பன்னீரெழுத்து முயிரென மொழிப"

என்ற சூத்திரம் உள்ளது. இதற்கு இளம்பூரணர், ஔகாரமாகிய இறுதியையுடைய பன்னிரெண்டு எழுத்தினையும் உயிரென்று கூறியுள்ளார்.

ஆனால், தமிழ் வட்டெழுத்திலோ. பதினொன்று உயிர் எழுத்து வடிவங்களே உள்ளன. "ஔ" வடிவம் இல்லை. பண்டைத்தமிழ் எழுத்துக்கள்' என்ற புத்தகத்தில் வட்டெழுத்துக்களின் வடிவங்களைக் கொடுத்துள்ள திரு. தி. ந. சுப்ரமணியன் 'ஔ' எழுத்து வடிவம் இருப்பதாகக் குறிப்பிடவில்லை.

திருவிதாங்கூர் இராஜ்ஜியத்தில் கண்டெடிக்கப்பட்ட வட்டெழுத்துச் செப்பேடுகளை படித்த திரு. கோபிநாதராவ் தான் வெளியிட்ட வட்டெழுத்து அட்டவணையில் 'ஔ' வடிவம் இருப்பதாகக் குறிப்பிடவில்லை. (Ref. Travancore Archeological Series Vol. II & III),

உகர. ஊகார உயிர் எழுத்துக்கள் தமிழ் எழுத்துக்களைப் போல் அல்லாமல் உகரத்தின் அருகில் கால் வாங்கட்பட்டு ஊகாரமாக வாசிக்கப்படுகிறது.

எகரம் ஏகாரத்திற்கு உட்புள்ளி வைத்து மாறுதல் காட்டப் படுகிறது.

உயிரெழுத்து, எகரக்குறிக்கு, எகரத்தின் உள்ளே புள்ளி வைக்கப்பட்டிருக்கிறது, ஏகாரத்தைக் குறிக்க புள்ளி இல்லை.

இதேபோல், ஒகரம், ஓகாரத்தின் வெறுபாட்டைக் குறிக்க புள்ளி பயன்படுத்தப்பட்டுள்ளது.

ஒகரத்தின் வெளியே புள்ளி வைத்தால் அது குறிலும் புள்ளி இல்லாவிட்டால் அது நெடிலையும் குறிக்கும்.

தொல்காப்பியத்தில்,

"மெய்யின் இயற்கை புள்ளியொடு நிலையல்"

என்ற சூத்திரத்திற்குபின்.

"எகர ஒகரத்தியற்கையு மற்றே"

என்ற சூத்திரம் உள்ளது.

இதன் பொருளாவது, எகர. ஒகரங்களுக்கும், ஏகார ஓகாரங்களுக்கும் எழுத்து வடிவில் வேற்றுமை உண்டு. எகர ஒகரங்களுக்கு புள்ளியும், ஏகார ஓகாரங்களுக்கு புள்ளி இல்லாமலும் இருக்கின்றன என்பதாகும். வட்டெழுத்தில் உயிர் எழுத்துக்களும், உயிர்மெய் எழுத்துக்களும் இந்த விதிப்படி எழுதப்பட்டுள்ளன என்பது குறிப்பிடத்தக்கது.

இந்த வடிவ ஒற்றுமையைக் குறிக்கும் ஒரு பழைய வெண்பாவைக் கவனிப்போம்.

"நேரிழையார் கூந்தலினோர் புள்ளிபெற நீண்மரமாம்

நீர் நிலையார் புள்ளிபெற நெருப்பாம்"

என்பது தண்டியலங்கார ஆசிரியர் "மாத்திரை சுருக்கத்திற்கு" காட்டிய மேற்கோள் வெண்பா பகுதியாகும்.

இங்கு நேரிழையார் கூந்தல்—ஓதி: அது புள்ளி பெறவே 'ஒதி' என்றாகி மரத்தைக் குறிக்கும்.

நீர் நிலை—ஏரி; அது புள்ளி பெறவே 'எரி' என்றாகி நெருப்பைக் குறிக்கும். எகர, ஒகர உயிர்கள் புள்ளிபெற எழுதப் பெற்று வந்த பழைய வழக்கு இப்பாடலின் கருத்தாக அமைந்துள்ளது.

[ ஆதாரம் : டாக்டர் ந. சுப்புரெட்டியார் ]

நன்னூல் எழுத்ததிகாரத்தில், உருவம் என்ற தலைப்பில் வந்துள்ள சூத்திரத்தை கவனிப்போம்.

"தொல்லை வடிவின வெல்லா வெழுத்து மாண்டெய்து மெகர வொகர மெய்புள்ளி"

இதன் கருத்தாவது, "எல்லா எழுத்துக்களும், பண்டைக் காலந்தொட்டு பல்வேறு வகையில் எழுதி வழங்கும் வடிவினதாக இருந்தது. அந்த வடிவங்களில் 'எ' கரங்களும், 'ஒ' கரங்களும் மற்றும் மெய்யெழுத்துக்களும் புள்ளி பெற்று இயங்கின."

இச்சூத்திரம் வட்டெழுத்தை அடிப்படையாக வைத்தே எழுதப்பட்டிருக்க வேண்டும்.

(நன்னூலை இயற்றிய பவணந்தி முனிவர் கொங்கு நாட்டைச் சேர்ந்தவர் என்றும் கொங்கு மண்டலச் சதகச் செய்யுள் கூறுகிறது. இவரது காலம் 12-ம் நூற்றாண்டு என்று கருதப்படுகிறது. 11-ம் நூற்றாண்டு வரை கொங்கு நாட்டில் கொங்கு மன்னர்கள் ஆட்சி செய்துள்ளனர். ஆகையால் நன்னூல் இயற்றிய காலத்தில் கொங்கு மண்டலத்தில் வட்டெழுத்து வழக்கில் இருந்திருக்க வேண்டும் என்று கருத இடமுண்டு.)

# உயிரெழுத்துக்கள்

| | தமிழ் வட்டெழுத்து | தற்காலத் தமிழ் எழுத்து | குறிப்பு |
|---|---|---|---|
| 1 | | அ | |
| 2 | | ஆ | |
| 3 | | இ | |
| 4 | | ஈ | |
| 5 | | உ | |
| 6 | | ஊ | |
| 7 | | எ | |
| 8 | | ஏ | |

# உயிரெழுத்துக்கள்

| | தமிழ் வட்டெழுத்து | தற்கால தமிழ் எழுத்து | குறிப்பு |
|---|---|---|---|
| 9 | | ஐ | சுசீந்திரம் ஸ்தாணுநாத சுவாமி கோயில் |
| 10 | | ஒ | |
| 11 | | ஓ | |
| 12 | | ஔ | இல்லை |

# ஆய்த எழுத்து

| | | | |
|---|---|---|---|
| 1 | | ஃ | இல்லை |
| | | | |

# ஆயுத எழுத்து

தொல்காப்பியத்தில்,

எழுத்தெனப்படுவ
அகரமுத னகர விறுவாய்
முப்ப தென்ப
சார்ந்து வரல் மரபின் மூன்றலங் கடையே.

அவை தாம்
குற்றிய லிகரம் குற்றிய லுகரம் ஆய்தமென்ற
முப்பாற் புள்ளியு மெழுத்தோ ரன்ன.

இதில் ஆய்தமென்ற முப்பாற் புள்ளியை கூறப்பட்டுள்ளது. வட்டெழுத்தில் ஆய்த எழுத்து வடிவம் இல்லை. திரு. தி. நா. சுப்ரமணியன் திரு. கோபிநாத ராவ் ஆகியோர் வட்டெழுத்தில் ஆய்த எழுத்து இருப்பதாகக் குறிப்பிடவில்லை.

இதுபோன்ற வடிவம் தமிழக குகை படிவங்களில் உள்ளன. அவைகளை 'இ' யென்று படிக்கப்படுகிறது.

இதுபோன்ற வடிவம் சாதவாகனர் காலத்திலும், பல்லவர் ஆட்சி ஆரம்ப காலத்திலும் காணப்படுவதாக திரு. சீனிவாச மூர்த்தி கூறியுள்ளார். (Ref. Indian Epigraphy and South Indian Scripts by C. Sivaramamurthy M.A., 1966) இவ்வெழுத்தை இகரமாகவே படிக்கப்பட்டுள்ளதாக கூறியுள்ளார்.

# மெய்யெழுத்து

வட்டெழுத்தில், மெய்யெழுத்துகள் புள்ளியுடனும், புள்ளி இல்லாமலும் உள்ளன.

'மெய்யின் இயல்பு புள்ளியுடன் நிலையல்

என்ற தொல்காப்பிய விதிப்படி பல செப்பேடுகளில் மெய்யெழுத்துகள் உள்ளன.

செப்பேடுகள் அரசர்களின் எழுத்தர்களால் எழுதப்படுவதால், அவைகள் இலக்கண முறைப்படி எழுதப்பட்டன என்றே கொள்ளவேண்டும். கல்வெட்டுகளில் புள்ளியிடும் வழக்கம் பெரும்பாலும் இல்லை. ஒருகால் கல்லில் புள்ளி செதுக்கும்போது அது கல் சிதைவுக்குக் காரணமாகக்கூடும் என்று கருதி புள்ளி இடாமல் விட்டிருக்கலாம்.

மகரத்திற்கும், பகரத்திற்கும் உள்ள வேற்றுமையை தொல்காப்பியர்,

உட்பெறு புள்ளி உருவாகும்மே

என்று கூறியுள்ளார்.

மகரத்திற்கு உட்புள்ளி உண்டென்றும், பகரத்திற்கு உட்புள்ளி கிடையாது என்பதும் இதன் கருத்து

மகரத்தின் உள்ளே, புள்ளி போன்ற அமைப்பு இருப்பதைக் காணலாம். இந்தப் புள்ளி பகரத்தில் இல்லை.

தமிழ் எழுத்தில் 18 மெய்யெழுத்து இருப்பது போல், வட்டெழுத்திலும் 18 மெய்யெழுத்துக்கள் உள்ளன.

# மெய் எழுத்துக்கள்

| | தமிழ் வட்டெழுத்து | தற்கால தமிழ்எழுத்து | குறிப்பு |
|---|---|---|---|
| 1 | [illegible] | க் | |
| 2 | [illegible] | ங் | |
| 3 | [illegible] | ச் | |
| 4 | [illegible] | ஞ் | |
| 5 | [illegible] | ட் | |
| 6 | [illegible] | ண் | |
| 7 | [illegible] | த் | |
| 8 | [illegible] | ந் | |
| 9 | [illegible] | ப் | |

# மெய் எழுத்துக்கள்

| | தமிழ் வட்டெழுத்து | தற்காலத் தமிழ் எழுத்து | குறிப்பு |
|---|---|---|---|
| 10 | | ம் | |
| 11 | | ய் | |
| 12 | | ர் | |
| 13 | | ல் | |
| 14 | | வ் | |
| 15 | | ழ் | |
| 16 | | ள் | |
| 17 | | ற் | |
| 18 | | ன் | |

# உயிர் மெய் எழுத்துக்கள்

வட்டெழுத்தில், உயிர்மெய் எழுத்துக்கள், தொல்காப்பிய சூத்திரப்படி அமைந்துள்ளன.

அச்சூத்திரமாவது :—

புள்ளி இல்லா எல்லா மெய்யும்
உருவுரு வாகி யகரமொடு யிர்த்தலும்
ஏனை யுயிரோடு உருவுதிரிந் துயிர்த்தலும்
ஆயீ ரியல வுயிர்த்த லாறே.

எல்லா மெய்களும் புள்ளி இல்லையாம் படியாகதத்தம் முன்னை வடிவே இன்னும் வடிவாக, அகரத்தோடு கூடி ஒலித்தலும் ஒழிந்த உயிர்களோடு இயல்புடைய ஒலிக்கும் முறைமை என்று இளம்பூரணர் கூறியுள்ளார்.

உருவுதிரிந்து உயிர்த்தல், என்பதற்கு, மேலும் கீழும் விலங்கு பெற்றும்; கோடு பெற்றும், புள்ளி பெற்றும், புள்ளியும் கோடும் உடன் பெற்றும் விளங்குகின்றன என்று விளக்கம் கூறப் பட்டுள்ளது.

கி, கீ முதலியன மேல் விலங்கு பெற்றன என்றும் கு முதலியன கீழ்விலங்கு பெற்றன என்றும் உரை ஆசிரியர் கூறி யுள்ளார். வட்டெழுத்தில் இதைப்போன்ற வடிவங்களைக்காணலாம்

இக்காலத்தில் கால் அல்லது தீர்க்கம் என்று எழுதப்படுவது, அக்காலத்தில் கோடு என்று வழங்கி வந்தது, அதை வட்டெழுத்தில் எழுதினர்

சா என்பது ச √ என்று எழுதப்பட்டது. இதையே கோடு பெற்று உயிர்த்தல் என்று கூறினர்,

உயிர்மெய் யெழுத்துக்களில், எகர ஒகரங்கள் புள்ளி பெற்றும் புள்ளியும் கோடும் பெற்றும் எழுதப் பெற்றன.

# உயிர்மெய் எழுத்துக்கள்

| | தமிழ் வட்டெழுத்து | தற்கால தமிழ் எழுத்து | குறிப்பு |
|---|---|---|---|
| 1 | | க | |
| 2 | | கா | |
| 3 | | கி | |
| 4 | | கீ | |
| 5 | | கு | |
| 6 | | கூ | |
| 7 | | கெ | |
| 8 | | கே | |

கெ· , கெ·√ , வடிவமைப்புக்கள் வட்டெழுத்தில் உள்ளன,

'ஔ' எழுத்து வடிவம் வட்டெழுத்தில் இல்லை. அதேபோல் இவ்வுயிருடன் புணர்ந்த உயிர் மெய்யெழுத்து வடிவங்களும் காணப்படவில்லை. இவ்வடிவம் பத்தாம் நூற்றுண்டு இராசராசன் கல்வெட்டு தமிழ் எழுத்துக்களிலும் காணப்படவில்லை.

(Ref. Scripts in and around India-1960 by Mr. K. Kannian)

பல்லவர் காலத்தில் 8 ஆம் நூற்றுண்டில் இடப்புறம் ஒரு மகொம்பும் வலப்புறம் ஒற்றை வளைவு கொண்ட கோடுமாக இதனை எழுதியதாகவும் 11 ஆம் நூற்றுண்டில் சோழர் காலத்திலும் பிறகு விஜயநகர அரசர்கள் காலத்திலும் வலப்புறம் ஒற்றை வளைவுடன் கூடிய அக்கோடு 'ள' அமைதியினைப் பெற்றுவிட்டதாக திரு. சி. சிவராமமூர்த்தி கூறுகிறுர்.

(ஆதாரம்-கல்வெட்டுகளும், எழுத்துக்களும்)

தற்காலத் தமிழ் எழுத்துக்களில், கீழே குறிக்கப்பட்டுள்ள உயிர்மெய் எழுத்து வடிவங்கள் தனித்தன்மையின. இவ்வெழுத்துக்களைப் பயன்படுத்தி எழுதப்படும் சொற்கள் அரிது; அல்லது இல்லை என்றே சொல்லலாம்.

அவை இரண்டு வகைப்படும்.

உகர வரிசையில்: ஞு, நு

ஊகார வரிசையில்: ஞூ, நூ

இகர வரிசையில்: ஞி, ஙி

ஈகார வரிசையில்: ஞீ, ஙீ

மேலே குறிப்பிட்டுள்ள எட்டு எழுத்துக்களில் ஞூ, ஞி, நூ ஙீ எழுத்துக்கள் வட்டெழுத்தில் காணப்படவில்லை.

தமிழ் எழுத்தில், பத்தாம் நூற்றுண்டு இராசராசன் காலத்து கல்வெட்டுகளிலும் இந்த எட்டு எழுத்து வடிவங்கள் காணப்படவில்லை.

(Ref. Scripts in and around India 1960 by Mr. V. Kannian)

# உயிர்மெய் எழுத்துக்கள்

| | தமிழ் வட்டெழுத்து | தற்கால தமிழ் எழுத்து | குறிப்பு |
|---|---|---|---|
| 9 | | கை | |
| 10 | | கொ | |
| 11 | | கோ | |
| 12 | | கௌ | இல்லை |
| | | | |

பழைய திருவிதாங்கூர் சமஸ்தானத்தில், கண்டெடுக்கப் பட்ட திருகடித்தானம் சாஸனம், திருவல்லா சாஸனங்களில் சில குறிப்பிடத்தக்க சொற்களைக் கீழேகொடுத்துள்ளேன். இச்சாஸ னங்கள் பத்தாம் நூற்றுண்டைச் சார்ந்தன. சாஸனங்கள் வட்டெழுத்தில் எழுதப்பட்டுள்ளன.

1. முக்கழைஞ் ஞு
2. பதின் கழைஞ் ஞு
3. பதினைஞ்ஞு கழைஞ்ஞு பொன்

மேலே உள்ள சொற்கள், முக்கழைஞ்சி, பதின் கழைஞ்சு, பதினைஞ்சு கழைஞ்சு என்று இருக்க வேண்டும். ஆனால் சேர நாட்டு தமிழ் உச்சரிப்பிற்கு ஏற்ப அவ்வாறு எழுதப்பட் டிருக்கலாம் என்று தோன்றுகிறது.

இதேபோல்

1. முஞ்ஞி நாட்டில்
2. காஞ்ஞி ரக்காடு
3. வஞ்ஞி மண் வடசேரி

ஆகிய சொற்கள், முஞ்சி நாட்டில், காஞ்சிரக்காடு, வஞ்சிமண் வடசேரி என்று இருக்கவேண்டும்.

இதேபோல்,

1, துடங்ஙுந்நாள்
2. இளங்ஙுன்ற நாட்டு நங்ஙையார்

ஆகிய சொற்கள் தொடங்குந்நாள், இளங்குன்ற நாட்டு நங்கையார் என்று இருக்க வேண்டும்.

இதே போல்

துடங்ஙி என்ற சொல் 'தொடங்கி' என்று இருக்க வேண்டும்.

தமிழ் நாட்டில் வழக்கில் இல்லாத இந்த எழுத்து வகைகள் சேர நாட்டில் எக்காலத்தில் வழக்கில் வந்தன, எத்தனை ஆண்டுகள் இருந்தன என்பதை மேலும் ஆராய்ச்சி செய்தால் தமிழ் மொழிக்கும் மலையாளத்திற்குமுள்ள தொடர்பு நன்கு வெளிப்படும்.

தற்கால தமிழ் உயிர் மெய்யெழுத்துக்களான னா, ணா, றா, வட்டெழுத்தில்

னா, ணா, றா வென்று தனித்தனியாக எழுதப்பட்டுள்ளன. இதே போல்

தூ, நூ, ரூ, லூ, எழுத்துக்கள்

துா, நுா, ருா, லுா வென்று தனித்தனியாக எழுதப் பட்டுள்ளன.

# உயிர்மெய் எழுத்துக்கள்

| | தமிழ் வட்டெழுத்து | தற்கால தமிழ் எழுத்து | குறிப்பு |
| --- | --- | --- | --- |
| 1 | | ஙு | |
| 2 | | ஙா | |
| 3 | | ஙி | திருக்கடித்தானம் சாஸனம் - 2 பாஸ்கர- -இரவிவர்மன் 11-ம்-நூற்றாண்டு |
| 4 | | ஙீ | தெரியவில்லை |
| 5 | | ஙு | திருவல்லா சாஸனம் 10-ம்-நூற்றாண்டு |
| 6 | | ஙூ | இல்லை |
| 7 | | ஙெ | தெரியவில்லை |
| 8 | | ஙே | தெரியவில்லை |

# உயிர்மெய் எழுத்துக்கள்

| | தமிழ் வட்டெழுத்து | தற்கால தமிழ் எழுத்து | குறிப்பு |
|---|---|---|---|
| 9 | | ஙை | திருவல்லா சாஸனம் 10-ம்-நூற்றாண்டு |
| 10 | | ஙொ | திருக்காக்கரை சாஸனம் பாஸ்கர இரவிவர்மன் 10-ம்-நூற்றாண்டு |
| 11 | | ஙோ | திருவல்லா சாஸனம் 10-ம்-நூற்றாண்டு |
| 12 | | ஙௌ | இல்லை |
| | | | |

# உயிர்மெய் எழுத்துக்கள்

| | தமிழ் வட்டெழுத்து | தற்கால தமிழ் எழுத்து | குறிப்பு |
|---|---|---|---|
| 1 | | ச | |
| 2 | | சா | |
| 3 | | சி | |
| 4 | | சீ | |
| 5 | | சு | |
| 6 | | சூ | |
| 7 | | செ | வைகை படுகை கல்வெட்டு. சேந்தன் 50-வது ஆண்டு |
| 8 | | சே | |

# உயிர் மெய் எழுத்துக்கள்

| | தமிழ் வட்டெழுத்து | தற்கால தமிழ் எழுத்து | குறிப்பு |
|---|---|---|---|
| 9 | | சை | |
| 10 | | சொ | |
| 11 | | சோ | |
| 12 | | சௌ | இல்லை |
| | | | |

# உயிர் மெய் எழுத்துக்கள்

| | தமிழ் வட்டெழுத்து | தற்கால தமிழ் எழுத்து | குறிப்பு |
|---|---|---|---|
| 1 | | ஞ | |
| 2 | | ஞா | |
| 3 | | ஞி | திருவல்லா சாஸனம் 10-ம்-நூற்றாண்டு |
| 4 | | ஞீ | தெரியவில்லை |
| 5 | | ஞு | தளவாய்புரம் சாசனம் |
| 6 | | ஞூ | திருவல்லா சாஸனம் 10-ம்-நூற்றாண்டு |
| 7 | | ஞெ | |
| 8 | | ஞே | திருக்காடித்தானம் சாஸனம்-2 பாஸ்கரா- -இரவிவர்மன் 10-ம்-நூற்றாண்டு |

# உயிர்மெய்எழுத்துக்கள்

| | தமிழ் வட்டெழுத்து | தற்கால தமிழ்எழுத்து | குறிப்பு |
|---|---|---|---|
| 9 | | ஞை | திருவல்லா சாஸனம் (HOZUR TREASUREY PLATES) |
| 10 | | ஞொ | தெரியவில்லை |
| 11 | | ஞோ | தெரியவில்லை |
| 12 | | ஞௌ | இல்லை |
| | | | |

# உயிர்மெய் எழுத்துக்கள்

| | தமிழ் வட்டெழுத்து | தற்கால தமிழ் எழுத்து | குறிப்பு |
|---|---|---|---|
| 1 | | ட | |
| 2 | | டா | |
| 3 | | டி | |
| 4 | | டீ | |
| 5 | | டு | |
| 6 | | டூ | |
| 7 | | டெ | |
| 8 | | டே | |

# உயிர் மெய் எழுத்துக்கள்

| | தமிழ் வட்டெழுத்து | தற்கால தமிழ் எழுத்து | குறிப்பு |
|---|---|---|---|
| 9 | | டை | |
| 10 | | டொ | |
| 11 | | டோ | |
| 12 | | டௌ | இல்லை |
| | | | |

# உயிர்மெய் எழுத்துக்கள்

| | தமிழ் வட்டெழுத்து | தற்கால தமிழ் எழுத்து | குறிப்பு |
|---|---|---|---|
| 1 | | ண | |
| 2 | | ணா | |
| 3 | | ணி | |
| 4 | | ணீ | |
| 5 | | ணு | |
| 6 | | ணூ | திருவல்லா சாஸனம் 10-ம்-நூற்றாண்டு |
| 7 | | ணெ | |
| 8 | | ணே | |

# உயிர்மெய் எழுத்துக்கள்

| | தமிழ் வட்டெழுத்து | தற்கால தமிழ் எழுத்து | குறிப்பு |
|---|---|---|---|
| 9 | | ணை | சின்னமனூர் சாசனம் |
| 10 | | ணொ | |
| 11 | | ணோ | |
| 12 | | ணௌ | இல்லை |
| | | | |

# உயிர்மெய் எழுத்துக்கள்

| | தமிழ் வட்டெழுத்து | தற்கால தமிழ்எழுத்து | குறிப்பு |
|---|---|---|---|
| 1 | | த | |
| 2 | | தா | |
| 3 | | தி | |
| 4 | | தீ | |
| 5 | | து | |
| 6 | | தூ | |
| 7 | | தெ | |
| 8 | | தே | |

# உயிர்மெய் எழுத்துக்கள்

| | தமிழ் வட்டெழுத்து | தற்கால தமிழ் எழுத்து | குறிப்பு |
|---|---|---|---|
| 9 | | தை | |
| 10 | | தொ | |
| 11 | | தோ | |
| 12 | | தௌ | இல்லை |
| | | | |

# உயிர் மெய் எழுத்துக்கள்

| | தமிழ் வட்டெழுத்து | தற்கால தமிழ் எழுத்து | குறிப்பு |
|---|---|---|---|
| 1 | | ந | |
| 2 | | நா | |
| 3 | | நி | |
| 4 | | நீ | |
| 5 | | நு | |
| 6 | | நூ | |
| 7 | | நெ | |
| 8 | | நே | |

# உயிர்மெய் எழுத்துக்கள்

| | தமிழ் வட்டெழுத்து | தற்கால தமிழ் எழுத்து | குறிப்பு |
|---|---|---|---|
| 9 | | நை | |
| 10 | | நொ | |
| 11 | | நோ | |
| 12 | | நௌ | இல்லை |
| | | | |

# உயிர்மெய் எழுத்துக்கள்

| | தமிழ் வட்டெழுத்து | தற்கால தமிழ் எழுத்து | குறிப்பு |
|---|---|---|---|
| 1 | | ப | |
| 2 | | பா | |
| 3 | | பி | |
| 4 | | பீ | |
| 5 | | பு | |
| 6 | | பூ | |
| 7 | | பெ | |
| 8 | | பே | |

# உயிர் மெய் எழுத்துக்கள்

| | தமிழ் வட்டெழுத்து | தற்கால தமிழ் எழுத்து | குறிப்பு |
|---|---|---|---|
| 9 | | பை | |
| 10 | | பொ | |
| 11 | | போ | |
| 12 | | பௌ | இல்லை |
| | | | |

# உயிர் மெய் எழுத்துக்கள்

| | தமிழ் வட்டெழுத்து | தற்கால தமிழ் எழுத்து | குறிப்பு |
|---|---|---|---|
| 1 | | ம | |
| 2 | | மா | |
| 3 | | மி | |
| 4 | | மீ | |
| 5 | | மு | |
| 6 | | மூ | |
| 7 | | மெ | |
| 8 | | மே | |

# உயிர் மெய் எழுத்துக்கள்

| | தமிழ் வட்டெழுத்து | தற்கால தமிழ் எழுத்து | குறிப்பு |
|---|---|---|---|
| 9 | [illegible] | மை | |
| 10 | [illegible] | மொ | |
| 11 | [illegible] | மோ | |
| 12 | | மௌ | இல்லை |
| | | | |

# உயிர்மெய் எழுத்துக்கள்

| | தமிழ் வட்டெழுத்து | தற்கால தமிழ் எழுத்து | குறிப்பு |
|---|---|---|---|
| 1 | | ய | |
| 2 | | யா | |
| 3 | | யி | |
| 4 | | யீ | |
| 5 | | யு | |
| 6 | | யூ | சாலை கிராமம் பரமக்குடி வட்டம் 10-ம். நூ. ஆ. |
| 7 | | யெ | |
| 8 | | யே | |

# உயிர்மெய் எழுத்துக்கள்

| | தமிழ் வட்டெழுத்து | தற்கால தமிழ் எழுத்து | குறிப்பு |
|---|---|---|---|
| 9 | | யை | |
| 10 | | யொ | |
| 11 | | யோ | |
| 12 | | யௌ | இல்லை |
| | | | |

# உயிர்மெய் எழுத்துக்கள்

| | தமிழ் வட்டெழுத்து | தற்கால தமிழ் எழுத்து | குறிப்பு |
|---|---|---|---|
| 1 | | ர | |
| 2 | | ரா | |
| 3 | | ரி | |
| 4 | | ரீ | |
| 5 | | ரு | |
| 6 | | ரூ | |
| 7 | | ரெ | |
| 8 | | ரே | |

# உயிர்மெய் எழுத்துக்கள்

| | தமிழ் வட்டெழுத்து | கற்கால தமிழ் எழுத்து | குறிப்பு |
|---|---|---|---|
| 9 | | றை | |
| 10 | | றொ | |
| 11 | | றோ | |
| 12 | | றௌ | இல்லை |
| | | | |

# உயிர்மெய் எழுத்துக்கள்

| | தமிழ் வட்டெழுத்து | தற்கால தமிழ் எழுத்து | குறிப்பு |
|---|---|---|---|
| 1 | | ல | |
| 2 | | லா | |
| 3 | | லி | |
| 4 | | லீ | |
| 5 | | லு | |
| 6 | | லூ | |
| 7 | | லெ | |
| 8 | | லே | |

# உயிர்மெய் எழுத்துக்கள்

| | தமிழ் வட்டெழுத்து | தற்கால தமிழ் எழுத்து | குறிப்பு |
|---|---|---|---|
| 9 | | லை | |
| 10 | | லொ | |
| 11 | | லோ | |
| 12 | | லௌ | இல்லை |
| | | | |

# உயிர்மெய் எழுத்துக்கள்

| | தமிழ் வட்டெழுத்து | தற்கால தமிழ் எழுத்து | குறிப்பு |
|---|---|---|---|
| 1 | | வ | |
| 2 | | வா | |
| 3 | | வி | |
| 4 | | வீ | |
| 5 | | வு | |
| 6 | | வூ | |
| 7 | | வெ | |
| 8 | | வே | |

# உயிர் மெய் எழுத்துக்கள்

| | தமிழ் வட்டெழுத்து | தற்கால தமிழ் எழுத்து | குறிப்பு |
|---|---|---|---|
| 9 | | வை | |
| 10 | | வொ | |
| 11 | | வோ | |
| 12 | | வௌ | இல்லை |
| | | | |

# உயிர்மெய் எழுத்துக்கள்

| | தமிழ் வட்டெழுத்து | தற்கால தமிழ்எழுத்து | குறிப்பு |
|---|---|---|---|
| 1 | | ழ | |
| 2 | | ழா | |
| 3 | | ழி | |
| 4 | | ழீ | சாலகிராமம் பாண்டியர் கல்வெட்டு |
| 5 | | ழு | |
| 6 | | ழூ | திருவல்லா சாஸனம் 10-ம்-நூற்றாண்டு |
| 7 | | ழெ | |
| 8 | | ழே | |

# உயிர்மெய் எழுத்துக்கள்

| | தமிழ் வட்டெழுத்து | தற்கால தமிழ் எழுத்து | குறிப்பு |
|---|---|---|---|
| 9 | | ழை | |
| 10 | | ழொ | |
| 11 | | ழோ | |
| 12 | | ழௌ | இல்லை |
| | | | |

# உயிர்மெய் எழுத்துக்கள்

| | தமிழ் வட்டெழுத்து | தற்கால தமிழ்எழுத்து | குறிப்பு |
|---|---|---|---|
| 1 | | ள | |
| 2 | | ளா | |
| 3 | | ளி | |
| 4 | | ளீ | |
| 5 | | ளு | |
| 6 | | ளூ | |
| 7 | | ளெ | |
| 8 | | ளே | |

## உயிர்மெய் எழுத்துக்கள்

| | தமிழ் வட்டெழுத்து | தற்கால தமிழ்எழுத்து | குறிப்பு |
|---|---|---|---|
| 9 | | ஊ | |
| 10 | | ொ | |
| 11 | | ோ | |
| 12 | | ௌ | இல்லை |
| | | | |

# உயிர்மெய் எழுத்துக்கள்

| | தமிழ் வட்டெழுத்து | தற்கால தமிழ் எழுத்து | குறிப்பு |
|---|---|---|---|
| 1 | | ற | |
| 2 | | றா | |
| 3 | | றி | |
| 4 | | றீ | |
| 5 | | று | |
| 6 | | றூ | |
| 7 | | றெ | |
| 8 | | றே | |

# உயிர்மெய் எழுத்துக்கள்

| | தமிழ் வட்டெழுத்து | தற்கால தமிழ் எழுத்து | குறிப்பு |
|---|---|---|---|
| 9 | | றை | |
| 10 | | றொ | |
| 11 | | றோ | |
| 12 | | றௌ | இல்லை |
| | | | |

# உயிர்மெய் எழுத்துக்கள்

| | தமிழ் வட்டெழுத்து | தற்கால தமிழ் எழுத்து | குறிப்பு |
|---|---|---|---|
| 1 | | ன | இராசசேகர சாஸனத்தில் இரா-ஞ இந்த வடிவமும் உள்ளது (8-9-ம் நூ. ஆ.) (T.A. SERIES, VOL II PART I) |
| 2 | | ஙு | |
| 3 | | னி | |
| 4 | | னீ | |
| 5 | | னு | |
| 6 | | னூ | |
| 7 | | னெ | |
| 8 | | னே | |

# உயிர்மெய் எழுத்துக்கள்

| | தமிழ் வட்டெழுத்து | தற்கால தமிழ் எழுத்து | குறிப்பு |
|---|---|---|---|
| 9 | | னை | |
| 10 | | னொ | |
| 11 | | னோ | |
| 12 | | னௌ | இல்லை |
| | | | |

1 கோமாறஞ்சடையற்கு உ
2. த்தர மந்த்ரிகளக்குடிவை
3. த்தந் மூவெந்த மங்கலப்
4. பேரரையன் ஆகிய மாறங்
5. காரி இக்கற்றளி செய்து
6. நீர்த் தளியாதெய் ஸ்வர்க்காரோ
7. ஹணஞ் செய்த பின்னை அவ
8. னுக்கு அநுஜந் உத்தர
9. ஞ்ஞவடி மெய்தின பாண்டி
10. மங்கல விசைஅரையன்
11. ஆகிய மாறன்னெ இ
12. வன் முகமண்டமஞ் செ
13. ய்து நீர்த்தளித்தான்.

← பாண்டியன் பராந்கதன் காலத்து (கி.பி-8ம் நூற்றுண்டு) வட்டெழுத்துக்கல்வெட்டு. மெய்யெழுத்துகளில் புள்ளி இல்லை என்பதை கவனிக்கவும். அக்கல்வெட்டின் பொருள் மேலே தமிழ் எழுத்தில் கொடுக்கப்பட்டுள்ளது. இடையிடையே சில கிரந்த எழுத்துக்களும் கலந்துள்ளன.

"ஏழாம் ஏடு பின்புறம்

104. வது செலாநிற்ப ஆங்கொருநாண் மாட மாமதிற்கூடற்பாடு நின்றவர் ஆ

105. ஷிரிக்கக் கொற்றவனேய் மற்றவரைத் தெற்றென நன்கு கூவி என்னேய் நுங்குறை

106. என்று முன்ருகப் பணித்தருள மேஞணின் குரவராற் பான்முறை இன் வ

107. மூவாமை மாகந்தோய் மலர்ச்சோலைப் பாகனூர்க் கூற்றத்துப் படுவது

108. ஆள்வதானை யடல் வேந்தேய் வேள்விகுடி என்னும்பியர் உடையது ஓ

109. ல்காத வேற்ருனை ஓடோதவேலி உடன் காத்த பல்யாக முதுகுடுமி

110. ப் பெருவழுதிஎன்னும்பரமேச்வரனுற் வேள்விகுடி என்னப்பட்டத்

111. கேள்வியிற்றரப்பட்ட தனைத் துளக்கமில்லாக் கடற்ருனையாய் ககத்ர

112. ரா லிறக்கப்பட்டது என்று நின்றவன் விஜ்ஞாப்ய ஞ் செய்ய நன்று நன்றென்று

113. முறுவலித்து நாட்டானின் பழமையாதல் காட்டி நீ [கொள்க வென்]ன நாட்ட[ா]ற்றன்

(வேள்விக்குடி செப்பேடு ஏழாம் ஏடு-பின்புறம். வட்டெழுத்து, செப்பேட்டின் தமிழ் எழுத்துக்கள் தொகுப்பு)

அகர முதலெழுத் தெல்லாம்
ஆதி பகவன் முதற்றே யுலகு

— குறள்

[illegible]

பூமலி அசோகின் புனைநிழல் அமர்ந்த
நான்முகன் தொழுது நன்கியம்புவன் எழுத்தே

— நன்னூல் (எழுத்தியல்)

[illegible]

[illegible]

## பார்வையிட்ட புத்தகங்கள்


1. பாண்டியர் செப்பேடு பத்து—தமிழ் வளர்ச்சிக் கழகம்
2. தொல் காப்பியம்—எழுத்ததிகாரம்—இளம் பூரணம்—
   வ. உ. சி. பதிப்பு (1941)
3. பண்டை தமிழ் எழுத்துகள்—தி. நா. சுப்ரமணியம் (1938)
4. பாண்டியர் வரலாறு—டாக்டர் கே. வி. இராமன்
5. செங்கம் நடுகற்கள்—இரா. நாகசாமி
6. Indian Epigraphy and South Indian Scripts. by
   C. Sivarama murthi M.A. (1966)
7. Scripts in and around India. compiled by V. Kannian B.A.
   (Govt. Museum Bulletin Madras) (1960)
8. Epigraphia Indica Vol. XXXIII part IV October 1959.
9. Tamil – Brahmi Inscriptions – Iravatham Mahadevan
   (1970)
10. Travancore Archeological serils — Vol. II Part III. by
    T.A. Gopinatha Rao M.A. and K.V. Subramaniya Iyer B.A
11. Seminar on Inscriptions – Edited by Dr. R. Nagaswamy
12. Elements of Indian paleography — (4th to 7th C) by
    A.C. Burnell.
13. Specimens of vatteluthu Inscriptions – Travancore
    Archeological serils I by T.A. Gopinatha Rao.